# அந்த ஆட்டை பிடியுங்கள்!

நைஜீரியாவில் ஒரு சந்தை நாளில்

பாலி அலகிஜா

தமிழில் கிருஷ்ணன்



அயோகா நான் வெளியில்
செல்கிறேன்.
ஆட்டை பார்த்து கொள்!



ஐயோ ஐயோ! இந்த ஆடு எங்கே போனது ?




அம்மா குடி, என்
ஆட்டை
பார்த்தீர்களா?

இல்லை அயோகா.
என்னுடைய ஒரு போலியை
(சுட்ட வாழைப்பழம்)
காணவில்லை. வெறும் பத்து
மட்டுமே உள்ளது !

அத்தை ப்ரெடி,
என் ஆட்டை
பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என் ஒரு ரொட்டி துண்டை காணோம். வெறும் ஒன்பது மட்டுமே உள்ளது !

அப்பா அகினோடே, என்
ஆட்டை பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என்
வண்ண டப்பாவை காணோம்.
வெறும் எட்டு மட்டுமே உள்ளது.


அம்மா எலிடேயே, என்
ஆட்டை பார்த்தாயா?
இல்லை அயோகா, ஆனால் என் கோழி
ஒன்றை காணோம். வெறும் ஏழு மட்டுமே
உள்ளது!

மாமா நாமடி, என் ஆட்டை
பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என்
குளிரூட்டும் கண்ணாடியை
காணோம். வெறும் ஆறு மட்டுமே
உள்ளது!

அத்தை வெமிமோ, என்
ஆட்டை பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என்னுடைய
டோப்பா முடி ஒன்றை காணோம். வெறும்
ஐந்து மட்டுமே உள்ளது!

ஓகா, என் ஆட்டை
பார்த்தாயா?

இல்லை அயோகா,
ஆனால் என்னுடைய ஒரு
ஆடையை காணோம்.
வெறும் நான்கு மட்டுமே
உள்ளது!

ஐயோலோமோன், என் ஆட்டை
பார்த்தாயா?

இல்லை அயோகா, ஆனால்
என்னுடைய ஒரு பிள்ளையை
காணோம். வெறும் மூன்று பேர்
மட்டுமே உள்ளார்கள்.

அத்தை பிம்பே, என் ஆட்டை
பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என்னுடைய
கைப்பை ஒன்றை காணோம். இரண்டு
மட்டுமே இருக்கிறது!

அத்தை பாட்டா, என்
ஆட்டை பார்த்தீர்களா?

இல்லை அயோகா, ஆனால் என்னுடைய ஒரு காலனியை
காணோம். ஒன்று மட்டுமே இருக்கிறது!

மாமா லைட்டான், என்
ஆட்டை பார்த்தீர்களா?

இல்லை அயோகா, நான் உன் ஆட்டை
பார்க்கவில்லை,  ஆனால் என்னுடைய
தொப்பி எங்கே போனது என்று
தெரியவில்லையே?

அயோகா! நம்
ஆட்டை
பார்த்தாயா?

இல்லை அம்மா

சரி, இங்கே
வந்து இதை
பாரேன்!

என் போலி

என் டோப்பா முடி

என் குளிரூட்டும் கண்ணாடி

என் வண்ண டப்பா

ரொட்டி துண்டு

என் கோழி






# யொரூபா மக்கள்

அயோகா ஒரு நைஜீரிய பெண். யொருபாஸ் என்பது ஒரு பெரிய பழங்குடி இனமாகும். அவர்களின் இசை, ஆட்டம், கலைகள் அனைத்தும் பிரசித்தி பெற்றவை. நீங்களும் அவர்களின் மர பொம்மைகள், வெண்கல சிற்பங்களை அருங்காட்சியத்தில் கண்டிருப்பீர்கள். சில யொரூபா மக்கள் முகத்தில் குறிகள் வரைந்திருப்பார்கள். அப்படி வரைபவர்களில் வெகு சிலரையே நாம் இப்போது காண முடியும். அவர்கள் இனத்தில் சொந்த குடும்பத்திற்கே முக்கியத்துவம் கொடுப்பார்கள். தூரத்து சொந்தம் என்றாலும் எல்லோரும் ஒருத்தொ ருக்கொருவர் உதவிசெய்து கொள்வார்கள். யார் ஒருவர் தங்கள் குடும்பத்தில் உள்ள எல்லோருக்கும் உதவி செய்கிறார்களோ அவர்களையே அந்த குடும்பத்தில் தலைவராக நியமிப்பார்கள். அவர்கள் மகிழ்ச்சியாக இருப்பதையே விரும்புகிறவர்கள். அதனாலேயே உலகிலேயே மகிழ்ச்சியாக இருக்கும் மக்களில் இவர்கள் முதன்மையாக திகழ்கிறார்கள்.

தற்போது யொரூபா மக்கள் உலகில் எல்லா மூலையிலும் வசிக்கிறார்கள். அவர்கள் எங்கே செல்கிறார்களோ அங்கே அவர்களுடைய கலாச்சாரமும் கொண்டு செல்கிறார்கள். சற்று உற்று கவனித்தால் லண்டன் தெருக்களில் கிழங்கு விற்பவரும், நியூயார்க் நகரத்தில் மோளம் அடிப்பவரும் யொரூபா இன மக்களாகவே இருப்பார்கள்.

ஒவ்வொரு யொரூபா மக்களின் பெயர் பின்னும் ‘அயோ’ என்ற பெயர் ஒட்டி இருக்கும். அயோ என்றால் மகிழ்ச்சி என்பதே அர்த்தம். அயோகா என்றால் மகிழ்ச்சி கொடுப்பவர் என்பதாகும். ஈயா என்றால் அம்மா என்று அர்த்தம். இயலோமோன் என்றால் நிறைய குழந்தைகளை பெற்றவள் என்று அர்த்தம். யாராவது தொய்வோ அல்லது கேகிண்டே என்று பெயர் வைத்திருந்தால் அவர்கள் இரட்டையர் என்று அர்த்தம்.

## யொரூபா ஆடை

யொரூபா மக்கள் தேவாலயம் அல்லது பள்ளிவாசல் செல்லும் போது அழகான ஆடை அணிவதில் மிக்க ஆர்வம் கொண்டவர்கள்.  இக்கதையில் அயோகா வின் அம்மா தேவாலயம் செல்கிறார். அவரது ஆடை இழை நூல்களால் பின்னப்படும் துணியால் செய்யப்பட்டது. அது அவருடைய பாரம்பரிய ஆடையாகும். கீழாடை பாவாடையும், மேலாடை  ரவிக்கையும், மிக முக்கியமானதாக தலைப்பாகை, மாமா லைட்டோன் னின் உடை கையில் நெய்யப்பட்ட துணியாகும். அது பூத்தையலால் அலங்கரிக்கப்பட்டது. இவ்வகை ஆடைகளை யொருபா ஊரில் நிறைய ஆண்கள் அணிவதை காண்பீர்கள். மற்ற பருத்தி ஆடைகளையும் அங்குள்ள மக்கள் அணிவார்கள். அவை இயற்கை சாயத்தினால் செய்யப்பட்டவையாகவும் அழகான வடிவங்கள் கொண்டவைகளாகவும்  இருக்கும்.

## யொரூபா மொழி

யொரூபா நகரங்களில் மக்கள் பெரும்பாலும் ஆங்கிலமும் யொரூபா மொழியும் பேசுகிறார்கள். அவர்கள் கலாச்சாரத்தில் வாழ்த்துக்கள் கூறுவது மிகவும் முக்கியம். பெரியவர்களுக்கு சிறியவர்கள் மரியாதை கொடுப்பது மிகவும் அவசியம். ஓகா என்றால் ஐயா, பாபா என்றால் மாமா அல்லது மிஸ்டர் , ஓனி என்றால் மதிப்புற்குரிய அல்லது மாமா, அத்தை என்றும் குறிக்கும். அத்தை என்று அழைத்தால் உண்மையான அத்தை என்று பொருள் அல்ல,  அது மரியாதைக்காக அல்லது நட்புக்காக அப்படி அழைக்கப்படுவதாகும்.





























# அயோகாவின் தின-வாழ்க்கை

அயோகா இபாதன் என்ற ஊரில் அடெமோலா என்னும் வீட்டில் வசிக்கிறாள். அவ்வீட்டில் கூட்டு குடும்பமாக எல்லோரும் வாழ்கிறார்கள். ஒருவருக்கொருவர் உதவியாக இருக்கிறார்கள். பிள்ளைகள் பள்ளியிலிருந்து வந்தவுடன் வீட்டு வேலைகளை பகிர்ந்து செய்வார்கள். தம்பி தங்கைகளை பார்த்து கொள்வார்கள், வீட்டை சுத்தம் செய்வார்கள். கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவார்கள். உணவு சமைப்பதில் உதவி செய்வார்கள். இதில் அயோகாவின் வேலை ஆட்டை பார்த்து கொள்வதாகும்.
இபாதன் ஊரில் யொரூபா இன மக்களே அதிகம். சிலர் கிருத்துவரும், சிலர் முகமதியரும் ஆகும். ஒரு தேவாலயத்தையோ, மசூதியோ சந்தையின் நடுவே காணக்கூடும். அங்கு அமைதியாக மக்கள் வழிபடுவதை காணலாம். இரண்டு மதவிழாக்களுக்கும் பொது விடுமுறை நாட்கள் நிறையவே இருக்கின்றன. இது பிள்ளைகளுக்கு விடுமுறை மட்டுமில்லாமல் இரு மதத்தையும் புரிந்து கொள்ளும் வாய்ப்பாகவும் அமைகிறது.



# சந்தைக்கு செல்லுதல்

அயோகாவின் ஊர் சந்தை மிகவும் பரபரப்பாகவும், சத்தம்வுடையதாகும் இருக்க கூடியது. ஒவ்வொரு மூலை-முடுக்கிலும் யாராவது எதையாவது விற்று கொண்டிருப்பார்கள். சமையல் நடந்து கொண்டே இருக்கும். அயோகாவின் வீட்டிற்கு வெளியேவே அவள் அம்மா குடி போலி (சுட்ட வாழைப்பழம்) விற்பாள்.
வேறொருவர் அக்கறை எனும் வறுத்த பீன்ஸ் கேக் விற்று கொண்டிருப்பார். வெளியே அம்மா புட்டின் உணவகத்தில் சில பெண்கள் கிழங்கை இடித்து கொண்டிருந்தார்கள்.

விற்பனைக்கு வைத்திருக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் அழகாக காட்சிப்படுத்தப்பட்டிருக்கும் அது ஒரு சிறிய பொருளாக இருந்தாலும் கூட. பேரிச்சம்பழம் போன்ற பழங்கள் கோபுரம் போல குமித்து வைத்திருக்கப்படும். வேர்க்கடலை பையில் அடைக்கப்பட்டு ஒரு பிரமிட் போல அடுக்கப்பட்டிருக்கும். கெளுத்தி மீன்களை நன்கு வறுத்து ஒரு குச்சியில் சொருகபட்டிருக்கும். நத்தைகளும் கூடையில் நிறைந்து கிடக்கும், சில வெளியில் வருவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கும். எங்கு திரும்பினாலும் ஒரு ஆட்டு குட்டியை காணலாம். ஏதோ தொலைந்து போனவை போலவே இருக்கும். ஆனால் அங்குள்ள ஒவ்வொருவரும் அவரவர் ஆட்டை நன்கு அறிவர்.



# நைஜீரியா எங்கு உள்ளது?

யொருபா மக்கள் வடக்கு ஆப்ரிக்க கண்டத்தில் தென்மேற்கு நைஜீரியா விலிருந்து வருகிறார்கள். நைஜீரியா பூமத்திய ரேகையின் வடக்கில் உள்ளது. ஆகையால் நைஜீரியாவில் எங்கு சென்றாலும் சூடாகவே இருக்கும்.

நைஜீரியாவில் இரண்டே பருவங்கள் தான். மே மாதத்திலிருந்து அக்டோபர் மாதம் வரை மழை காலம் அப்போது ஈரமும் வெக்கையுமாகவே இருக்கும். வறண்ட காலம் நவம்பர் காலத்திலிருந்து ஏப்ரல் மாதம் வரை அப்போது சூடும் வறட்சியும் நிறைந்ததாக இருக்கும். தெற்கில் வெப்ப மண்டலம் சார்ந்த நிலமாகும். பெரிய காடுகள் ஒரு காலத்தில் இருந்தது. அவைகள் யாவும் காலப் போக்கில் விவசாயத்திற்காக அழிக்கப்பட்டுவிட்டது.

நைஜீரியாவின் தலைநகரம் அபுஜா. அது நடுவில் உள்ளது. லாகோஸ் நகரம் வணிக தலைநகரமாக உள்ளது அங்கு தான் துறைமுகமும் உள்ளது.





ஒரு ஆட்டை
அயோகாவின் பொறுப்பில்
அவள் அம்மா விட்டு
செல்கிறாள். சிறிது
நேரத்திலேயே அந்த ஆடு
காணாமல் போகிறது.
காணாமல் போன ஆடு
போகின்ற வழியிலுள்ள
கடைகளில் எதியோ
ஒன்றை தூக்கி செல்கிறது.
அயோகவால் அந்த
ஆட்டை கண்டுபிடிக்க
முடிந்ததா?